ஞாயிறு வெளியீடு. விலை 0-1-3. REGD. NO. M. 4455

விளம்பர விகிதம்.
இஞ்சு ஒன்றுக்கு 1-0-0.
சர்க்கார் கோர்ட்டு 2-0-0

# திராவிடநாடு

வருடசந்தா ரூ. 5—0—0
ஆறுமாதம் ரூ. 2—8—0
தனிப்பிரதி ரூ. 0—1—3

மலர் 3 | காஞ்சிபுரம் 2—7—44 | இதழ் 17.

## ஊரார்-உரையாடல்.

ஒற்றன்.

இடம்:—மைலாப்பூர்.

உரையாடுவோர்:—கிருஷ்ணய்யர்,
கோபால சர்மா,
கோமளவல்லி
(கிருஷ்ணய்யர் மனைவி)

வேளை:—மாலை.

நிலைமை[மைலாப்பூரிலே, தமது மாடி வீட்டிலே, மாலை வேளையிலே, வக்கீல் கிருஷ்ணய்யர், ஊஞ்சலில் சாய்ந்து கொண்டிருக்கிறார். அவர்மனைவிகோமளவல்லி, சினிமாவுக்குப்புறப்பட, அலங்காரங்கள் செய்துகொண்டிருக் கிருள். கோமளத்தின் "மேக் அப்" திறமையைக் கண்டு, களித்து, கிருஷ்ணய்யர், "உனைக் கண்டு மயங்காதபேர்களுண்டோ" என்று பாடுகிறார்.]

கோமளா:-(புன்னகையை முதலிலே செலுத்திவிட்டு, கிருஷ்ணய்யரைக் கனிவுடன் நோக்கியபடி) "ஏது, பாட்டு பிரமாதமாகஇருக்கே! சினிமாவுக்குக்கூட வராமலேயே, எங்கிருந்துதான் தெரிஞ்சிண்டு வர்ரீரோ தெரியல்லே, இந்தப் பாட்டெல்லாம்.

கிருஷ்ணய்யர்:-"தேவி தெரிசன விசேஷந்தான். காளிதாசன், காளமேகம் முதலான கவிதாசிரோமணிகளெல்லாம் அம்பாள் அனுக்கிரகத்தாலேதானே, வித்வத்வம் பெற்றதாகச்சொல்ரு. அதேபோலத்தான் இங்கேயும். அதுகிடக்கட்டும்!ஏண்டி கோமளம், ஒரு அரைமணிக்குமுன்னுலே பார்த்தா முகத்திலே அசடு வழிந்திண்டு, கிழடுதட்டின மாதிரி இருந்துதே, இப்போ பார்த்தா, பதினெட்டு வயசுச் சிறுக்கிபோல மாறிவிட்டாயே, . இது யாரிடம் தெரிஞ்சிண்ட வித்தே.

கோமளம்:-கேலி பேசறதிலே, உமக்கு ஒரு திருப்தி. நான் அப்படி என்ன அலங்காரம் செய்சிண்டேன். முகத்தை அலம்பிண்டேன்..............

கிருஷ்:-எத்தனை தடவைஇருக்கும்?மூணு தடவைக்குக் குறைஞ்சிராது......

கோம:-சும்மா இருங்கோ, எப்போதும் போல இரண்டுதடவைதான் அலம்பிண்டேன்.

கிருஷ்:-கூட்டிகூரா, ஜவ்வாது, சென்ட், ஜமாய்க்கிறதேடி. சேலையும் ரோஸ் கலர், ஜாக்கட்டும் அதேநிறம், தலையிலே கர்ல், கண்ணிலே டால், நடையிலே ஒயில், பேச்சோகுயில்...

கோம:-(கண்ணுடியிலே முகத்தைப் பார்த்துக் கர்லைச் சரிப்படுத்திக் கொண்டே) நேக்குப் பிரமாதமா கோபம் வரும், இப்படிப்பேசிண்டே போனு. நான் ஒரு நல்ல புடவையா உடுத்திண்டா உமக்குக் கண்ணைக் குத்தறதோ.

(சதிபதிகளின் சரச உரையாடலைக்கேட்டுக்கொண்டே உள்ளே நுழைகிறார் சங்கீதப்பிரியர், கோபால சர்மா.)

கோபால:-என்ன சம்வாதம்?

கோம:-வாங்கோ! இவா, பாருங்கோ, நான் சினிமா போகணும்னு......

கோபால:-போகவேண்டாம்னு சொல்ருனே. நீ அவனைக் கேட்பானேன்?

கிருஷ்:-அதைச் சொல்ருப்பா! இப்ப, ஏதோ சமயா சமயத்திலே என்னிடம் சொல்லிட்டு வெளியே போறதுன்ற வழக்கத்தைஅவ, வைச்சிண்டிருக்கா. உன் போதனை கொஞ்சம் ஏறினு, தீர்ந்தது, அதுவும் போக வேண்டியதுதான்.

கோம:-விஷயத்தைக் கேளுங்கோ. சினிமாபோகணும்னு இந்தச்சேலையைக் கட்டிண்டேன். அரைமணி நேரமாக் கேலிசெய்ருர்.

கோபால:-அவனுக்குப் பால்யம் திரும்பறது! சினிமாவுக்கு வேண்டியநேரமிருக்கு. கொஞ்சம் சிரமத்தைப் பாராமே ஒரு கப் காபி கொடுத்தூட்டுப்போ. எத்தனை ஓட்டலிலே போய்ச் சாட்டாலும், கோமளம் ஆத்துக் காபிபோலப் பிரபஞ்சத்திலேயே கிடையாது.

கிருஷ்:-நீ தாண்டா, மெச்சிக்கொள்ளணும்.

கோபால:-நோக்கென்னடா தெரியும் கோமளத்தினுடைய கைத்திறமை.

கிருஷ்:-கைத்திறமை வாய்த்திறமை எல்லாம் தெரியும்.

(கோமளம் காபி தயாரிக்க உள்ளே போகிருள்)

கிருஷ்:-ஏதாகிலும் விசேஷமான சேதி உண்டோ?

கோபால:-இருக்கு! கஸ்தூரிபாய் நிதிக் கமிட்டிக்குக் குமாரராஜா தலைவராக இருக்கேர். இராமநாதபுரம் ஜில்லாவுக்கு.

கிருஷ்:-என்ன ஆச்சர்யம்! குமாரராஜாவா, கஸ்தூரிபாய்க் கமிட்டிக்குத் தலைவரா இருக்கச் சம்மதித்தேர்!

கோபால:-ஏன் சம்மதிக்கமாட்டார்? ஓய்! சுத்தப்பைத்யக்கார மனுஷனு இருக்கிரே. கஸ்தூரிபாய் நிதிக்கமிட்டிக்குத் தலைவராக இருக்கறதுன்னு, சாமான்யமா! எவ்வளவு புகழ், மனுஷ்யன் சும்மாதானு அந்தக்கமிட்டியிலே இருக்க ஒப்பிண்டேர்! பேரும் புகழும் வருமென்ற ஆசைதான். கஸ்தூரிபாய் கமிட்டியிலே குமாரராஜா தலைவராக இருப்பதிலே, காங்கிரசுக்குப் புதிசா கியாதியா வரும்னு நினைக்கிறீர். குமாரராஜாவுக்குத்தான் கீர்த்தி. அதைத் தெரிஞ்சுதான் அதிலே சேர்ந்தார்.

கிருஷ்:-அப்படி இருக்குமா?

கோபால:-வேறே எப்படிஇருக்கமுடியும் சொல்லுமே கேட்போம். குமார

(2ம்பக்கம் பார்க்க.)

## ஊரார்-உரையாடல்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி.)

ராஜா என்ன, காங்கிரசோ? இல்லே. அவர், கொள்கை வேறே, இவா கொள்கை வேறே:

கிருஷ்:-அதுதானே, நேக்குத் தூக்கி வாரிப்போடறது, நம்ப முடியவே இல்லையே. கியாதிக்காகவா இதிலே சேருவார்?

கோபால:-சுத்த அசடு ஓய்நீர்! இந்தியா பூராவும் இருக்கிற பேப்பரிலே எல்லாம்,பாராட்டிஎழுதுவாளேன்னே குமாரராஜா, ஜஸ்டிஸ் கட்சியிலே இருந்தாலும், கஸ்தூரிபாய் நிதியிலே சிரத்தை காட்டினார் இது பெரிய மனுஷாளுக்கு இருக்க வேண்டியகுணம், தேசபக்திஎன்று புகழ்ந்து எழுதுவா.எவ்வளவுபணம் செலவு செய்தா, இப்படிப்பட்ட விளம்பரம்பெற முடியும் இந்தியா பூராவிலும் இருக்கிறபேபர்களிலே. கணக்குப்போட்டுப்பாருமே. அவர் என்ன செட்டிப்பிள்ளை இல்லையோ, இலாபநஷ்டக் கணக்குப் பாராமே நடப்பாரோ?

கிருஷ்:—ஓய்! நீர் சொல்றதிலே அர்த்தம் இருக்கு. கதர்கட்டிக்கொராட்டினம் சுற்றி, மகாத்மா சொன்னதும் ஜெயிலுக்கும்போய் கஷ்டப்பட்டுமத்தவாவாங்குகிற தேசபக்தர் பட்டத்தைக் குமாரராஜா, கஷ்டப்படாமே, ஜெயிலுக்குப்போகாமே, சுலபமா, கொஞ்சம் பொருட்செலவிலே, பெற்றுவிடுகிருர், இதுநல்ல யுக்திதான்!

கோபா:-தேசபக்தர் என்ற பட்டமும், யாரிடமிருந்து பெறுகிருர், தெரியுமோ? காங்கிரஸ்காரரிடமிருந்தே! பாருங்கோ! ஒரு நொடியிலே, கோவாலாட்டரியிலே மனுஷ்யன் இலட்சாதிகாரியாவது போல, ஒரு கமிட்டியிலே தலைவராக இருக்கச் சம்மதித்து, குமாரராஜா தேசபக்தர்என்ற பட்டம்பெற்று விட்டார். வடநாட்டிலே இருக்கிற கோடீஸ்வரான், முதற்கொண்டுஇனிக்குமாரராஜாவைப் புகழ்வாளேன்னே?

கிருஷ்:-வாஸ்தவம்! குமாரராஜா இலேசான ஆளில்லே ஓய். ரொம்பசமர்த்காரமானகாரியம்னுசெய்திருக்கோர்.

கோபா:-ஒரு சூட்சமம் இருக்கு பாருங்கு இதிலே. காங்கிரசிலேயே சேர்ந்துண்டா, பிறகு, அவாளுடைய கட்டுதிட்டங்களுக்கு அடங்கணும், சர்க்காருடைய திருஷ்டிதோஷத்துக்குப் பயப்படவேணும். காங்கிரசிலேயும் சேராமே சர்க்காரையும் எதிர்க்காமே இருந்துண்டு, சமயா சமயத்திலே இப்படிக் காங்கிரஸ்காரர் செய்றமுயற்சிகளிலே கொஞ்சம் ஆதரவு காட்டிவிட்டா, காங்கிரஸ்காரும் புகழ்வா, கஷ்டமும் இராது பாருங்கோ! நாளைக்குஎலக்ஷன்வர்ரதுன்னுவையுங்கோ, குமாரராஜாவை எதிர்க்கிறதுன்னு, கொஞ்சம் யோசிப்பாளேன்னே காங்கிரஸ் தலைவர்கள். மகாத்மாவே சொல்வேர் தொலைஞ்சிபோறது குமாரராஜா, கஸ்தூரிபாய் கமிட்டியிலே, இருந்தார், அவருக்குப் போட்டிபோடவேண்டாம், என்றுசொல்லி, குமாரராஜா எலக்ஷனிலே சுலபமா ஜெயிக்க ஒத்தாசை செய்தாலும் செய்வார்.

கிருஷ்:-வாஸ்தவமான பேச்சு! குமாரராஜாவே கூடச்சொல்வாரென்னே அந்தக்காலத்திலே. எனக்குக்கூடவாபோட்டி ஆள்நிறுத்துவது?நான் கஸ்தூரிபாய் கமிட்டியிலே கூட இருந்தேனே, என்று கேட்கலாம் பாருங்கோ!

கோபா:-பாருங்கோ! டெலஸ்கோப் கண்ணல்லவோ இருக்கு அவருக்கு.

[கோமளம், காப்பியுடன் வந்துசேருகிருள். கோப்பையிலே காப்பியைக் கொட்டி இருவருக்கும் தந்துவிட்டு, வியர்வையைத் துடைக்கும் பாவனையிலே மறுபடியும் மேக்அப்துவக்குகிருள்]

கிருஷ்:-ஒரு விஷயம் இருக்கு இதிலே. குமாரராஜாவைக் கஸ்தூரிபாய் கமிட்டியிலேசேர்த்தது, ஒருபெரிய தவறுன்னு நேக்கு படறது.

கோபா:-எப்படி?

கிருஷ்:-டாடா, பஜாஜ்பிர்லா, முதலிய கோடீஸ்வரா, இலட்ச இலட்சமா தரப்போரு. நம்மபக்கத்து மகாராஜாக்களும் சீமான்களும் அவாளவாள் சக்தியானுசாரம் தரத்தான் போரு. மகாத்மாவின் பெயருக்காகப்பணம்சேரப்போறது, குமாரராஜாக்கள் இருந்தாலும் இல்லாமற்போனாலும். அப்படிஇருக்க, இப்ப குமாரராஜாவை இதிலே சேர்த்ததாலே, நாளைக்குக் குமாரராஜா சொல்லாவிட்டாலும், அவருடைய கட்சி ஆட்கள் சொல்வாளேன்னே இவ்வளவு பணம்வசூலானது யாராலே? எங்குமாரராஜா போன்றதலைவர்களை எல்லாம், கெஞ்சிக்கூத்தாடிக் கமிட்டியிலே சேர்த்ததாலே தானே! உங்களுடைய சொந்த செல்வாக்கினுலா இவ்வளவு பணம் கிடைச்சுது? உங்களாலேயே பணத்தைத்திரட்ட முடியும்னு ஏன், காங்கிரசுக்கு எதிரிடையா உள்ளவாளை அதிலேசேர்த்திண்டீர்.அந்தக்காலத்திலே, எப்படியாவது பெரியதொகையாச் சேர்த்தாப்போதும்னு நினைச்சேளே தவிற, ரோஷம்இருந்ததோ உமக்குஎன்றெல்லாம் சொல்வாபாருங்கோ.

கோபா:-ஆமாம் ஓய்! ஆமாம்!

கிருஷ்:-அதுமட்டும் இல்லே ஓய்! சர்க்கார் கூடநாளைக்குச் சொல்லும், இந்தப் பெரிய தொகை வசூலானதற்குக் காரணமே, என்னவென்றல், குமாரராஜா முதலான கோடீஸ்வரர்களின் தயவைக்காங்கிரஸ்பெற்றதாலே தான், என்று சொல்லிக், காங்கிரசுக்கு என்று தனிச்செல்வாக்குஇல்லே என்பதைக்காங்கிரஸ்காரரே தெரிஞ்சிண்டதாலே தான், ஜஸ்டிஸ்முதலிய கட்சியிலே உள்ள தலைவர்களைக் கஸ்தூரிபாய் கமிட்டியிலேசேர்த்தண்டான்னுசொல்வா.

கோபா:-அட டா! ஆபத்தன்னே இது. என்இவா இப்படித்தானு வலையிலே வீழ்ந்தா? மதிப்பைக் கெடுத்திண்டாளே! கௌரவத்துக்கே பங்கமன்னே எற்பட்டுவிடும்போலிருக்கு.

கிருஷ்:-அது மட்டுமில்லே ஓய்! கேக்கு இதைப்பற்றி நினைக்க நினைக்கப் புதுசு புதுசா யோசனைகள் தோன்றது. இப்படிக் காங்கிரசக்குன்னு ஒரு தனிச்செல்வாக்குக் கிடையாதுன்னு ஒருஎண்ணம் வளரவேண்டுமென்ற எண்ணத்தாலே, பகையாளிக்குடியை உறவாடிக்கெடு என்பதுபோலே ஒருசமயம் இந்தக் குமாரராஜா போன்றவா, கமிட்டியிலே சேர்ந்தாளோன்னு நினைக்கிறேன்.

கோபா:-இருக்கும்! யார்கண்டா! நாளைக்குக்கஸ்தூரிபாய் கமிட்டியிலே இப்ப சேர்ந்தபணத்தை இப்படி இப்படித்தான் செலவிடனும்னு சொல்ற பாத்யதை ஏற்பட்டுப் போறது பாருங்கோ, குமாரராஜாபோன்றவாளுக்கு. நாங்களும் சேர்ந்துதான் இவ்வளவு பணம்சேர்த்துக்கொடுத்திருக்கோம், ஆனதாலே, இந்தப் பணத்தை இப்படி இப்படித்தான் செலவுசெய்யவேணும்னு, குமாரராஜா முதலானவா சொல்வா, அதிலேஒரு வியாஜ்யம்வரும், தொந்தரவுதானே இது.

[கோமளம்:-உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு..........]

கோம:-குமாரராஜா, கமிட்டியிலேஇருக்கிற விஷயமாத்தானு பிரமாதமாப் பேசறீர். அவருக்கென்ன பைத்தியமா! காரியத்தோடேதான் அதிலே

(9ம் பக்கம் பார்க்க)



தொடர் கதை,

☆

சௌமியன்.

# பார்வதி பி. ஏ;

கதை கற்பனையே, கதையில்வரும் பெயர்கள் யாரையும் குறிப்பிடுவனவல்ல.

[முன்பு:-லோபி ஆலாலசுந்தரர், அறிமுகப் படுத்தப்படுகிறர். அவருக்கு வாரிசாகவர இருக்கும் பார்த்திபன் எனும் வாலிப வாய்வீரனுக்குக் காதலி பார்வதி B. A; இவள் ஓர் இலட்சியவர்தி.குமார் எனும்,பாட்டாளி, பார்த்திபனுடைய பிரசங்கத்தில்இலயிக்கிறன்குமார்போதுப் பணத்தைக் கொள்ளையடித்து மறைந்து விட்டதாகப் பத்திரிகையிலே செய்தி. பார்வதி கவலைப் படுகிறள். உத்தமி என்பவளின் சிநேகிதத்தால் பார்வதிக்கு டைபிஸ்ட் வேலை கிடைக்கிறது. பார்த்திபனால் 'ரட்சகன்' என்னும்பத்திரிகை நடத்தப்படுகிறது. நீதிக்கள் தமரதுபரர், பார்த்திபனுக்கும் ஜெயத்துக்கும் சிநேகிதம்உண்டாகும்படி வேலைசெய்து மகிழ்ச்சியடைகிறர். இதற்கிடையே பார்வதியின் தோழி, உத்தமிக்கு, நரசிம்மன் என்பவன் காதலனாகிறன். பார்த்திபன், கதகளிநடனம் பார்க்கக் கேரளம் செல்கிறன். உத்தமி கருவுற்றாள். நரசிம்மன், குமுதினி என்பவளைக் கலியாணம்செய்து கொண்டு, உத்தமியைக் கைவிடுகிறன், குமுதினியின் உதவியால் உத்தமி பெங்களூர் செல்கிறள். அந்த குழப்பத்துடன் ஓர் மாநாடு நடைபெறுகிறது. பிறகு........]

ஒரு மங்கையைத் தழுவ ஆவலோடு ஒரு ஆடவன் செல்லும் நேரம், எப்படிப் பட்டது! அந்தச் சமயத்திலே, அவனுடைய உணர்ச்சியும் உயிர்த்துடிப்பும்உடல் பதைப்பும், எடுத்துரைக்கும் கவியும் உண்டோ?மலைகடுகாகவும்,பாம்புபழுதையாகவும் தோன்றுமாம், அப்படிப்பட்ட சமயத்திலே! அந்த நிலைமையிலே இருந்த பார்த்திபன், கதவு திறந்துகொண்டு ஒரு மாது நுழைந்து "மன்னிக்கவேண்டும்" என்று கூறுவதுகண்டு, கொண்ட கோபம் கொஞ்சமல்ல! மன்னிக்கவேண்டுமாம், மன்னிப்பது! மன்னிக்கவே முடியாத குற்றத்தைச்செய்து விட்டாள், இவளை மன்னிக்கவேண்டுமாம்! மடைத்தனம் மிகுந்தவள்! மலரின் மணம்அழைக்க அதனருகே சென்று, இதழை எடுக்கக் குனிகிறேன், குளவி கொட்டிவிட்டு என்னை மன்னிக்கவேண்டும் என்றுவேறு கேட்கிறது! எவ்வளவு திமிர்! பழத்தைத் தின்னப்போகும் கோத்தில் கைநழுவிக் கீழே விழ, வீழ்ந்த பழத்தை மந்தி எடுத்துக்கொண்டு கிளையிலேதாவிஉட்கார்ந்து கொண்டு வருத்தம் வேண்டாம்! என்று கூறுவதா! வாழ்க்கையின் விருந்தைக் கெடுத்தாள். ஆனந்தத்தை அணைக்கப் போனேன், அக்ரமக்காரி குறுக்கிட்டுத் தடுத்துக்கெடுத்தாள் இன்பத்தை! வீணையின் நரம்புகளை முறித்துவிட்டாள் என்றெல்லாம் எண்ணினான் பார்த்திபன். அடக்கி அடக்கிப் பார்த்தும் அவனால் முடியவில்லை. "பார்வதி யார்! இந்தமாது சிரோமணி!" என்று கோபமும் கேலியும் மிகுந்த குரலுடன் கேட்டான்.

"லேடி டாக்டர் லலிதகுமாரி" என்று பார்வதி பதில்கூறினாள், மகிழ்ச்சியோடு. தப்பினோம் பெரியதோர்ஆபத்திலிருந்து, மலைமீதிருந்து மடுவிலேவிழ இருந்தோம், பின்புறமிருந்து கூந்தலைப்பிடித்திழுத்துக் காப்பாற்றிவிட்டாள், நஞ்சுகலந்த பாலைப்பருக இருந்த சமயம், பாத்திரத்தைக் கீழேதட்டி உயிரைக் காப்பாற்றி விட்டாள், அக்ரமக்காரனின் அணைப்பினின்றும் தப்புவித்தாள் லலிதா, என்ற சந்தோஷம் பார்வதிக்கு. ஆகவேதான், பார்த்திபன் கேட்டதற்குப் பார்வதி மகிழ்வோடு பதிலுரைத்தாள். அவளுடைய மகிழ்ச்சி, பார்த்திபனுடைய கோபத்தீய்க்கு விசிறியாயிற்று. "எனக்கொன்றும் நோயில்லையே!" என்று கூறினான், கெம்பீரம் கலந்த கேலி என்ற நினைப்பிலே. லலிதகுமாரிக்கு பலபார்த்திபன்கள் தெரியுமல்லவா! எனவேஅவன் பார்த்திபனுடைய துடுக்குத்தனத்தையும் கர்வத்தையும் தலைமீது அடிப்பதுபோலக் கூறினாள். "டாக்டருக்குத்தெரியுமல்லவா, பார்த்த உடனே! தங்களைக்கண்டவுடன் நான்தெரிந்துகொண்டேன் கடுமையான நோய் இருக்கிறதென்பதை" என்று.

"அது என்ன வியாதியோ" என்று மறுகேள்வியைப் பூட்டினான் பார்த்திபன்.

"திமிர்வாதநோய்" என்று தீரமாகப் பதிலளித்தாள் லலிதா. பார்த்திபன் மேலும் பேசுவதற்குள் மளமளவென்று லலிதா, "இந்தத்திமிர்வாத நோய்கொண்டவர்களுக்குத் திடீர்க்கோபம்வரும்,கண்களிலே தீபறப்பது போலிருக்கும், உடல் அடிக்கடி பதறும், உள்ளம் குமுறும், நெஞ்சு உலரும், நோயின் குறிகள் நான் சொன்னவை. ஒரே மருந்துதான் இருக்கிறது இந்தத் திமிர்வாதம் போக, அது என்னிடமேதான் இருக்கிறது" என்று கூறினாள். கடுங்கோபம்கொண்டான் பார்த்திபன். பெருங்குரலோடு பேசலானான், "எனக்காதிமிர்! எனக்கா?என்னையாரென்று நினைத்துக்கொண்டு பேசுகிறாய்,பார்வதி! உன் முகத்துக்காகச்சும்மா இருக்கிறேன்" என்றான்.

"இல்லாவிட்டால்......" என்று குத்தலாகக்கேட்டாள் லலிதா"

"கழுத்தைப்பிடித்து வெளியே தள்ளியிருப்பேன், போலீசிலே ஒப்புவித்திருப்பேன்" என்று பார்த்திபன் கூவினான். பார்வதி இந்தஎதிர்பாராத நிலைமையைக் கண்டு என்னசெய்வதென்று தெரியாது பதைக்கலானாள். லலிதகுமாரி, பார்த்திபனை ஏற இறங்கப்பார்த்துவிட்டுச் சிரித்தாள். பார்த்திபன் அவள் சிரித்ததைப் போலவே சிரித்துக்காட்டினான்கேலிக்கு!

லலிதகுமாரி "பேஷ், சபாஷ், ஜோராக இருக்கிறதே. பபூன் வேஷத்துக்குப் பொருத்தமாக இருக்கும்" என்று கூறிக் கைகொட்டிச் சிரித்தாள் மறுபடியும், அவனை வெளியே தள்ளப் பார்த்திபன் நெருங்கினான், பார்வதி அவனைத்தடுத்து "இது என்னவிபரீதம், கொஞ்சம் கோபத்தை அடக்குங்கள், லலிதகுமாரி என் சிநேகிதி. லலிதா! இவர் என் நண்பர். நான் இருவரையும் நண்பர்களாக்கவேண்டுமென்று நினைத்திருக்க, நீங்கள் காரணமின்றி ஒருவரை ஒருவர்தண்டபடிபேசிக் கொள்கிறீர்களே" என்று கூறினாள். பார்த்திபன் சாய்வு நாற்காலியிலே படுத்தான், பெருமூச்சுடன், கண்களைமூடிக் கொண்டு. லலிதா, மற்றோர் நாற்காலியிலே உட்கார்ந்து, பார்வதியைப்பார்த்து "இதுபோல நான் அவமானப்படுத்தப் பட்டதே கிடையாது. என்காலை மிதித்தவர்களின் தலையை மிதிப்பதுதான் எனக்கு வழக்கம்" என்றுகூறினாள். கண்களைத்திறந்து பார்த்திபன், "என்வழக்கம் என்ன தெரியுமா......?" என்று கோபமாகக்கேட்டான். "தெரிந்துதான் இங்கே வந்தேன்" என்று தீப்பறக்கப் பதிலுரைத்தாள் லலிதா. "தெரிந்து வந்தாயா, எதை?" என்றுகேட்டான் பார்த்திபன்.

லேடிடாக்டர், ஒரு கடிதத்தைப் பார்த்திபன் எதிரிலே வீசஎறிந்து, 'போதுமாபார்,உன்னைப்பற்றித்தெரிந்துதான் இங்கேவந்திருக்கிறேன் என்பதற்கு ருஜு" என்று கூறிவிட்டு, வெற்றிக் களை முகத்திலேதுலங்க, உட்கார்ந்தாள். நடுக்கும் கையுடன், கடிதத்தை எடுத்தான் பார்த்திபன். பார்வதி, "என்ன கடிதம்! லலி! என்ன விஷயம்" என்று கேட்டுக்கொண்டே லலிதாவின்தோளைப் பிடித்துக் குலுக்கினாள். கடிதத்தின் இரண்டோர் வரிகளைப்படித்ததும்,பார்த்

(4-ம் பக்கம் பார்க்க)

## பார்வதி பி. ஏ;

3-ம் பக்கத்தொடர்ச்சி

திபனுடைய முகம் மாறிவிட்டது, பயத்தோடு லலிதகுமாரியைப்பார்த்தான், பார்வதிக்குப் பதிலே கூருமல் உட்கார்ந்திருந்த லலிதகுமாரி, "இப்போதுதெரிந்துகொள், நான்வந்த காரணத்தை. முழுவதும்படி, உனக்கு வெட்கமாக இருந்தால், என்னிடம்கொடு நானே படிக்கிறேன்" என்று கூறினுள். கடிதத்தைக்கசக்கிக் கிழேவீசிவிட்டுப் பார்த்திபன், "எவளோ ஒரு ஊர் பேர்தெரியாத சிறுக்கியின் உளறல் இக்கடிதம்" என்று கூறினன். கடிதத்தைப் பார்வதிஎடுத்தாள், படிக்க. பார்த்திபன் பாய்ந்தோடினுன், "அது ஒரு துஷ்டையின் தூற்றல் கடிதம். இப்படிக்கொடு" என்று கேட்டபடி. பார்வதிதரவில்லை. பிரித்துப்படித்துப்பார்த்தாள்.

சீமான் பார்த்திபனுக்கு!

எவ்வளவுதான் என்னை நீங்கள் மறந்தாலும், நானுங்களை மறக்கமாட்டேன். பெண்களின் சுபாவமே அதுதானே. அவர்களாக ஒரு ஆடவனிடம் அன்பு காட்டுவது கஷ்டம், ஆனல் எப்படியோ அந்த அன்பு ஏற்பட்டுவிட்டால், பிறகு அதே ஆண்கள் எவ்வளவு துரோகம் செய்தபோதிலும், கொடுமைசெய்தாலும், அடித்தாலும் உதைத்தாலும் பொறுத்துக்கொள்வார்கள். அது அவர்கள் வழக்கமாகிவிட்டது. உத்தமி என்றும், பத்தினி, சதி, என்றும் கதைப்புத்தகங்களிலே எழுதப்பட்டிருக்கிறதே, அந்தப்பெண்கள் எல்லாம், புருஷர்களிடம் எவ்வளவு இம்சை அடைந்தவர்கள் என்பதை நான் சொல்லத்தேவையில்லை, நீங்கள் பத்துப்பேருக்குக் கூறக்கூடியவர். பெரிய மேதாவி. தலைவர். பத்திரிகைக்கு எடிடர். என்னிடம் தாங்கள்காட்டிய அன்பைக்கண்டு ஏமாந்துபோனேன். கடைசிவரையிலே கைவிடுவதில்லை என்றும், என்னையன்றி வேறொருவளை ஏறெடுத்துப் பார்ப்பதில்லைஎன்றும், எவ்வளவோ சொன்னீர்கள். நான் உங்கள் இஷ்டத்திற்கு இணங்கும்வ ரை யி லே ஏதேதோபேசிவிட்டுப் பிறகு என்னைவிட்டுப் பிரிந்தீர்கள். மலையாளநாட்டுக்குச் சென்றபிறகு என்னை மறந்தீர்கள். அங்கு தாங்கள் எவளெவளுடனேகூடிக்குலாவினீர்கள் என்று கேள்விப்பட்டேன். ஒரு அழகான முகத்தைக்கண்டாலேபோதும் இந்த ஆண்களுக்கு, முகத்திலே அசடு வழியும், நெஞ்சுபடபடக்கும். ஆகவே நீங்களும், மலையாளநாட்டுக்கு ஏதோ காட்டியக்கலை விஷயமாகக் கற்றுக்கொண்டுவரப்போனீர்கள். எந்த நாட்டியத்திலோ இலயித்துப்போய், என்னைக் கைவிட்டுவிட்டீர்கள். நீங்கள் எத்தனை பெண்களிடம் கூடிக்குலா வி னு லு ம், திரும்பி இங்குதானே வருவீர்கள்என்று எண்ணிக்கொண்டிருந்தேன். அங்கு யாரோ ரோஸ் என்பவளோடு கூடிக்கொண்டு திரிந்தீர்களாம். திரிந்தால் தான் என்ன? ஏதோ மோகம் முப்பது நாள் ஆசை அறுபதுநாள் என்று சொல்வார்களே அதைப்போலக் கொஞ்சக்காலம் அவளோடு இருந்துவிட்டு மறுபடியும், உங்களையே நம்பிக்கொண்டிருக்கிற என்னிடம்வந்துசேருவீர்கள் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். இப்போது என் ஆசையிலே மண்விழுந்துவிட்டது.

என்ன ஒருதுளியும் விரும்பவில்லை என்பதுஎனக்குத்தெரிந்திருந்தும், நான் ஏன், வலிய உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன் என்று கேட்பீர்கள், ஏதோ இஷ்டம் இருக்கும்வரையிலே சினேகிதமாக இருந்தேன், இஷ்டமில்லை இப்போது ஆகவே வருவதில்லை, இதற்கு ஒரு கேள்வியா! உலகத்திலே இதுபோல நடப்பது சகஜந்தானே. இதற்கு ஒருபெண், அதிலும் தாசி, கோபிக்கலாமோ, என்று கேலிசெய்வீர்கள். ஆனல் நான் உங்களிடம் இனிக்கெஞ்சிக் கூத்தாடப்போவதில்லை. கூத்தாடவேண்டிய அவசியமுமில்லை! உங்கள் இரகசியம் என்உள்ளங்கையிலே அடங்கிக்கிடக்கிறது. மிரட்டுவதாக எண்ணவேண்டாம். இத்தனை நாளில்லாமல் இப்போதுதான், மிரட்டுவேனு?

நாலுநாட்களுக்கு முன்பு, ஒருஆளைக் காணநேரிட்டது. அவன் எனக்குக் கூறியுள்ள இரகசியங்களை நான் வெளியே தெரிவித்துவிட்டால், பிறகு தெரியும் உங்கள் நிலைமை! கூண்டேறிநிற்கவேண்டும். உங்கள்பணம், படிப்பு, பட்டம், முதலிய எதுவும் தடுக்காது. அவ்வளவு பெரிய இரகசியம் என்னிடம் சிக்கிக்கொண்டிருக்கிறது. உமது உயிருக்கே உலைவைக்கக்கூடிய இரகசியம். யாரார் இன்று உங்களைப் புகழ்கிறர்களோ அவர்களே ஆளுக்கொருகல்லெடுத்து வீசுவார்கள் உங்கள் தலைமீது.

நான் கூறுவதற்குச்சரியானருஜு என்னிடம்இருக்கிறது. சீர், நமதுபழயநட்பை மனதிலேஎண்ணி, ஒரு பெண்ணை எய்ப்பது ஆண்மகனுக்கு அழகல்ல, நீதியல்ல என்பதை, உத்தேசித்து, பழயபடி என்னுடன் சினேகமாகி, என்னை ரிஜிஸ்டர் கலியாணம் செய்து கொண்டால், இரகசியத்தை வெளியே விடமாட்டேன். உங்களுடைய தீர்மானமான பதிலை, பதினைந்து நாட்களுக்குள் தெரிவிக்கவேண்டும். பதில்வராவிட்டால், எனக்கு இரகசியத்தைக்கூறிய ஆளுடன், நான், பெரிய அதிகாரிகளைச் சந்தித்துப்பேசி உம்மைச் ச ந் தி க் கு இழுக்கப்போகிறேன். இது சத்தியம். வீண் மிரட்டல் என்றுஎண்ண வேண்டாம். உ ங் க ள் இரகசியத்தை எனக்குக்கூறி, என்னை இக்கடிதமும் எழுதச்சொன்னவர் மூலமாகத்தான் நீங்கள் பெங்களூரில் ஊ ரை ஏமாற்றப் போவீருக்கிற விஷயமும் தெரியவந்தது. என்ன இரகசியம், என்ன ஆபத்து, ஏன் இவள் இப்படி மிரட்டுகிருள் என்று யோசித்துக்கொண்டே பொழுதைஓட்டிவிட்டுப்பிறகு ஆபத்திலே சிக்கிக்கொள்ள வேண்டாம். எனக்கு உண்மையிலேயே உங்கள் இரகசியம் தெரிந்திருக்கிறதுஎன்பதை நீங்கள் தெரிந்துகொள்ளச் சூட்சமமாக இரண்டு வார்த்தைகள் எழுதுகிறேன், இதிலிருந்தாவது தெரிந்துகொள்ளும், எனக்கு உங்கள்இரகசியம்தெரிந்திருக்கிறது என்பதை. துமார். வேடிதண்டு.

இப்படிக்கு, ஜெயா.

[தொடரும்]

## போச்சே!

நார்மண்டியில் சேர்பர்க் துறைமுகம்!

இத்தாலியிலே பியாஸெல்லோ வால்பாப்பிரிக்கா!

ரஷிய களத்திலே விடப்ஸ்க், ஆர்ஷா!

ஹெர் ஹிட்லர்! போனதுடன் விடுவார்களா? நார்மண்டியிலே சேசநேசத் துருப்புகள் பாய்கின்றன. பின்லாந்திலே, அரண்களை அழித்துக்கொண்டு ரஷியப் படைகள் பாய்கின்றன! இத்தாலியிலும் அவ்விதமே!

ஓட்டியில்லாவிமானம், பறக்கும்குண்டு கள்வீசியும் பயனில்லை.

வெள்ளை ரஷியாவிலேமட்டும் 20,000 நாஜிகள் மாண்டனர், 10000 பேர்பிடிபட்டனர். நார்மண்டிப் பகுதியிலே 50000 பேருக்குப் பிடிபட்டனர். சேதம் ஏராளம்.

பின்லந்தின் தலைவரான ஹெல்சின் கிக்குஜாஜிப்படைகள்போகின்றன. அவைகள் திரும்பப்போவதில்லை. சோவியத் தீயிலே சாம்பலாகும். மூன்று முனைகளிலே மும்முரமானபோர், சேசநாட்டினருக்கு வெற்றிமேல் வெற்றி. இனி ஹிட்லர் என்னசெய்வது?



# திராவிட நாடு.

காஞ்சி 2—7—44 ஞாயிறு

## கருங்குழியார்!

★

எட்டிக்கொட்டையல்லவோ எஜமானே! எப்படி அதனைநான் தின்பது? சசக்குமே, உயிர் பதைக்குமே! என்று கேட்கிறன் அடிமை.

"மட்டிப்பயலே! கொட்டரத்தை அடக்குவேன். கிட்டே வந்து நின்று சட்டம் பேசுகிறயா? கிட்டிபோட்டு உன் கரத்தைத் தட்டிவிடுகிறேன். எட்டியானுல் என்ன, எடுத்துத்தின்றுதானாக வேண்டும் என்று இறுமாப்புடன் இயம்புகிறன், எஜமானன்.

இது எஜமானன் வெறும் இறுமாப்புடன் இருந்த காலத்துக்காட்சி.

"இது கசக்குமாமே, இதை எப்படி நான் தின்ன முடியும்?" என்று கேட்கிறன் அடிமை. எஜமானன் புன்சிரிப்புடன், "அடமுட்டாளே! யாரோ உன்னை ஏய்த்துவிட்டார்கள். எட்டி, எங்காவது கசப்பாக இருக்குமா! எவர் சொன்னர் இங்கு கொண்டுவா" என்று இதமாகப் பேசுகிறர், வஞ்சகத்தை மறைத்து. இது கேள்வி பிறந்தகாலத்திலே, காலத்தை அறிந்த தந்திரக்காரன், கபடத்தால் தனது அடிமையை அடக்கும் காட்சி.

"எனக்குத் தெரியுமே. எட்டிக்கசப்பு என்று எவரும் கூறுவரே. அதை நான் என் தின்னவேண்டும், முடியாது" என்று தெளிவால் பிறந்த தீர்மானத்தோடுபேசுகிறன் அடிமை. "ஆமாம் எட்டி கசப்புதான், ஆனல் உடலுக்கு உறுதிதருமே, அதனை அறியாய்! இனிப்பு ஊக்கச் செய்யும் கைப்புதழைக்கச்செய்யும் என்று அகத்தியரின் வைத்திய அகவல்கூறுகிறது. நீ அதனைப்படித்ததில்லை. நீ, எட்டிதின்றல், உன் தேகம் கெட்டிப்படும். தின்பதும் தின்னுததும் உன் இஷ்டம்" என்று குதைச் சமர்த்தாக மறைத்துவயக்கிறன் எஜமானன். இது தெளிவுதோன்றிய போது, அடிமையை அறிவின் துணைகொண்டு தயாரித்த சூதினுல் எஜமானன் அடக்கும் காட்சி.

### அந்திய காலம்.

இங்ஙனம் அடிமையைஅடக்கக் காலத்திக்குக்காலம், விதவிதமானமுறைகளைக் கையாண்டு, ஆண்டான் அடிமை என்ற ஏற்பாட்டைமறையவிடாதபடி தடுத்துவருவது, உலகிலேஇந்நாடன்றி, வேறெங்கும் இல்லை, ஏனெனில்இங்குதான்,மூலையில்மூடபனியினரும், மனநிலைமேருளுடையோரும், நாக்கும் வாக்கும் போக்கற்றுப் போனேரும், தடித்ததோலரும் அதிகம். பச்சைத்தமிழில் கூறுவதானல், மானத்தையும் ரோஷத்தையும் இழந்தவர்கள் அதிகம்! எனவேதான், வலியோர் சிலர் எளியோர் தமை வதையேபுரிகிறர், மகமுஜர்கள் உலகாளுரார், ஓட்டப்பர் ஓலமிடுகிறர், ஆண்டி அரசனைமிரட்டுகிருர், அநாகரிகம் அச்சமின்றி அரசோச்சுகிறது. அறிவுக்குச்சிறை, ஆண்மைக்குஈரை. பாதகத்துக்குப்பீடம், பார்ப்பனியத்துக் குச்சூடம், இருந்திடக்காண்கிறேம்.

இந்தக்கொடுமையை, எவரும் நன்கு உணரும் விதத்திலே இன்றும் "இந்த மதம்" எடுத்துக்காட்டுகிறது. இளித்த வாயனை ஏய்த்துப்பிழைக்கும் திட்டம், காலதேசவர்த்தமானத்துக்குத் தக்கபடி, அவ்வப்போது செப்பனிடப்பட்டு வருகிற விந்தையை, இந்துமதத்தின் வரலாற்றை அறிந்தோர் அறிவர். இந்து மதத்திலே சீர்திருத்தம் என்றும், வழிபாடு முறைகளிலே புதுமாற்றம் என்றும், மக்கள் வாழ்க்கை அமைப்பிலே புதிய திட்டத்தோற்றம் என் றும் பேசப்படும் போதும், வியாசரின் உண்மைக் கருத்து பாராசரின் பரந்த நோக்கம், வேதத் தின்சாரம், உபநிஷத்தின் உண்மை, என்று தத்துவார்த்தங்கள் உரைக்கப்படுகிற காலேயும், நமக்கு அடிமையை அடக்கியாள, எஜமானன் புது வேலை முறையைக் கையாளும் விதமாகவே தோற்றுகிறது. ஏனெனில் புரட்சிவாடை வீசும் நேரத்திலே, புத்துலகக் கருத்து வளரும் இடத்திலே, இந்துமதப் பாதுகாவலர்கள் உடனே ஓர் மாற்றுமருந்து தயாரித்து விடுகின்றனர், அதனைத் தந்திரமாகத் தந்துவிடுகின்றனர், புரட்சிவேகத்தைப் போக்கிவிட்டுப் பிறகு, பழய ஏற்பாடு நிலைத்ததுஎன்றமகிழ்ச்சியுடன், புன்னகை பூத்தமுகத்தினராய் வா ழு கி ன் ற ன ர்! ஆனல், பாவம், அவர்கள் அறியவில்லை, அந்தியகாலத்தை அவர்கள் அணுகி இருக்கிற உண்மையை!

### விஷ விருட்சம்.

திருத்தி அமைப்பதன்மூலம் இந்து மார்க்கம்வளம்பெறுமென்றே,அம்மார்க்கத்தைத் தழுவிடுவோரை வளமாக்குமென்றே மனப்பால் குடிப்பவர்கள், ஒரு முக்கியமான உண்மையைமறந்து, மருளுலகிலேவாழுகின்றனர். இந்துமார்க்கத்திலே, எண்ணற்ற முறை, இன்றன்னோரினும் மேலானதிறம்படைத்தவர்களால்,சீர்திருத்தங்கள்புகுத்தப்பட்டு,புதுமுறைகள்வகுக்கப்பட்டு, புதியதிட்டங்கள் தீட்டப்பட்டு நாளாவட்டத்தில் அவைகள் பட்டுப்போகவே, பழயவிஷ விருட்சம், பழயபடிஇருக்கிறது என்பதனைப், புதிய ஆர்வத்தை அணைத்துக்கொண்டு வாழும் அன்பர்கள் அறிவதில்லை. பிரமசமாஜமும் ஆரியசமாஜமும், இந்த மார்க்கத்தைத் திருத்தத்தோன்றியஇயக்கங்களே! அவை இரண்டும் இன்று இந்த மார்க்கத்தின் எடுபிடி ஆட்களாகிவிட்டன! சீக்கியமார்க்கம், இந்த மதத்தின் சீர்கேட்டை மறுத்துஅறப்போர் தொடுத்து அமைத்த அறிவுப்படையே! ஆனல் இன்று, அதனை "எமது ஏவலர் படை!" என்று இந்து மதவாதிகள் மட்டுமல்ல, இந்து அரசியல் வாதிகளும் இறுமாப்புடன் கூறிக்கொள்ளக்கேட்கிறேம். எவரும் எம்பிரான்அடியார்களே! என்றும் ஆவிரித்து நின்று உழலும் புலையாளனும் அரங்கனைத் தொழும் அன்பாலுல் அவர் கண்டீர் யாம் வணங்கும் தெய்வம்என்றுகூறின ஆழ்வார்களும் இதுபோது ஆலயங்களிலே அலங்காரப் பொம்மைகளாகி, அவர்தம்மொழி, பிரசாதத்தின்மீது விழிவைத்துவாழும் கூட்டத்தினரின் காலைமாலை கூச்சலுக்குப் பயன்பட்டுப்போயினவேயன்றி, இந்து சமுதாயத்தின் அமைப்பு முறையை அசைக்கவும் முடியவில்லை. மேல் கீழ்நிலை இன்றும், அன்று போலவே இருந்திடக்காண்கிறேம்.ஜாதியின் சண்டித்தனம் குறையாது இருப்பதையே பார்க்கிறேம். அந்தஸ்திலேயேயிலே, அதிகாரவேகத்தாலே, செல்வத்தின் சக்தியாலே, சிற்சில, கலப்புகள், கூட்டுறவுகள், நேசங்கள், உண்டாகிஇருக்கலாமேஒழிய, சாஸ்திரத்தை அடிப்படையாகக்கொண்ட சட்டதிட்டமோ, மார்க்கத்தை அடிப்படையாகக்கொண்ட கட்டுப்பாடோ, இன்றும் குறைந்தது என்று கூறுவதற்கில்லை.

### மனமாற்றம் இல்லையே!

இந்நிலையிலே, கொடுமைக்கு ஆளாகுபவர்கள், இக்கொடுமையைவிட்டு விலகிடத் துணிவதிலே ஆச்சரியம் என்ன! இத்துணிவு, வேகமாகப் பரவாததிலே நாம் ஆச்சரியம் கொள்கிறேம்! பெரும்பாலான மக்கள் இத்துணிவு பெறவில்லையே, இன்னமும் பெறவில்லையே என்று ஆயாசப்படுகிறேம். ஆண்டவன் படைப்பிலே அனைவரும் சமமே என்றுகூற, கூறியபடி நடைமுறையை ஏற்படுத்த மனமில்லை, இந்துமதவாதிகளுக்கு. காலத்தின்வேகத்தையும் அவர்கள் இலட்சியம் செய்வதில்லை. ஆதனூரில் அன்று வேதியர் இருந்த ஆணவத்திற்கு இன்று ஒரு இம்மியும் அக்கிரகாரத்திலே குறைச்சலாக இருப்பதாகக்கூ ற மு டி யா து! அன்று அற்புதத்தை நடத்திக்காட்டியதற்காக நந்தனர் காலிலே வேதியர் வீழ்ந்தது போல இன்று அறிவுபெற்று அதிகாரமும் பெற்றுள்ள அம்பெத்கார் திருவடிகளைத் தொழுவதற்குவேண்டுமானல் வேதியக் கூட்டம்விரும்புமே.ஒழிய சமூகத்திலே உள்ள சாதிப்பிரிவுகளைஒழிக்க சித்தமாக இல்லை. எல்லோரும் சமம் என்றகூறும் எண்ணம் வரவேண்டும். அந்த மனமாற்றம் ஏற்படாத வரையில் மத

(6-ம் பக்கம் பார்க்க)

## கருங்குழியார்.

5-ம் பக்கத்தொடர்ச்சி

மாற்றம் இருந்தேதீரும். மலேரியா கிருமி இரத்தத்திலே இருக்கும்வரை காய்ச்சல் இருந்தேதீரும்,! புண்ணிலிருந்து புனுகு வாடை பிறக்காது,! விழிபழுதாகி விட்டால் வழியிலே உள்ளகருங்குழியிலே வீழாமல் தப்பமுடியுமா?

பிணியாளன் மருத்துவரைத்தேடுவதும், பசித்தோன் உணவு விடுதியை நாடுவதும், இயற்கை! இதனை உணர மறுப்பது மடமை என்று நாம்கூறுவோம், ஆனல் "மேதாவிகள்" என்று தம்மைக் கருதிக்கொள்ளும்பலர்; இதனை உணர மறுப்பதால், அவ்வளவு பெரியவர்கள்மீது எப்படி இவ்வளவு கடுமையான வார்த்தையை வீசுவது என்று கருதி, இதனை உணர மறுப்பவர்கள் உண்மையை மறக்கிருர்கள் என்றுஉரைக்கிறேம். மீண்டும்கூறுகிறேம், தெளிவாகத் தைரியமாக, இந்து மதத்திலே உயர்ஜாதிக்காரர்என்ற பட்டியிலேதமது பெயரைப் பொறித்துக்கொண்டுள்ளவர்களிடையே மனமாற்றம் ஏற்படாதவரை மதமாற்றம் இருந்தேதீரும்.

ஆதில்லாத பேர், கார்காணு வானம், விளையாத வயல், கூரைபிரிந்த குடிசை, கொல்லையிலே கொடும் பாம்பு வாசம், இங்கே குடியிருக்கிறன் குப்பன். அவனுக்கு அடுத்த கிராமத்திலே, ஆற்றேரத்திலே, நஞ்சை நிலத்துடன்கூடிய நல்லதோர் விடுதியைத்தர விழைகிறர் ஓர் கொடையாளி, குமுறிக்கிடந்த குப்பன், கூத்தாடுவானு மாட்டானு இக்களிப்பூட்டும்செய்திகேட்டு! அடுத்தக்கிராமத்துக்கு ஓட்டமாகச் செல்லாதிருப்பானு! அங்ஙனம் போகிறவனைவழிமறித்துக்கொண்டு "குப்பா! எங்களை விட்டுப் போகலாமா அப்பா!" என்று கேட்பது அழகாஎன்று கேட்கிறேம். நமக்கிருக்கும் தோட்டம் வீடு, மாடு, கன்று, முதலியனவற்றை எண்ணி மகிழ்ந்து வாழ்வது போலத் தானே, உயர்ஜாதி இந்துக்கள்என்போர், ஆறுகோடிக்கு மேற்பட்ட பழங்குடி மக்களாகிய ஆதித்திராவிடர்கள் இருக்கிறர்கள் உழைக்க, ஊர்காவல்புரிய, அடங்கி ஒடுங்கி நடக்க, அடிமையாகிக் கிடக்க என்று எண்ணி இறுமாந்துகிடக்கிறர்கள். தங்களுடையநிலத்துக்காவது, விளைவு அதிகமாக வேண்டுமென்பதற்காக உரம் தருவர், வீடுகலஞதபடி பழுதுபார்ப்பர், பூசிமெழுகுவர், அதுவும் செய்வதில்லை ஆதித் திராவிடர் விஷயத்திலே. கட்டிக்கழித்த கந்தையைத் தருவர், அதனைப் பெரிய கண்ணியமென்று எண்ணுவர்! சேரியிலே இருக்கச்செய்வர், அது அவன்செய்த தீவினை என்று செப்புவர். தீண்டாதானெனக் கூறுவர், தெருவினில் நடக்கவிடார் சில இடங்களிலே. வேட்டி கட்டினுல் வேலமரத்திலே கட்டிப் புளிய மிலாறினுல் அடிப்பர்! குளத்திலேஇறங்கிவிட்டால், குருந்தடிகொண்டு அடிப்பர். செருப்புடன்நடந்தால்என்னசெருக்கடா, என்று கேட்டுச் சித்திரவதை செய்வது, இன்னமும்காட்டாட்சி போன்ற கிராமச் சமூக ஆட்சியிலே நடைபெறக் காண்கிறேம். "காருண்ய துரைகளுக்கு மனுக்கள் போடுவதும், கலெக்டர் துரைக்குக் கடுதாசி எழுதுவதும், வக்கீல் ஐயாவின் வீட்டுக்கு வாத்தியார் ஐயாவை அனுப்புவதும், வழக்குக்கு ரூபா அதிகமாகும் என்று தெரிந்து கொள்வதும்" இன்னமும், அடிக்கடி கிராமாந்திரங்களிலே நடைபெறுவதுண்டு. இல்லை என்போரிடம் உண்மை இல்லை.

இப்படிப்பட்ட கொடுமைகள் இருக்கின்றன, இவை இல்லாத இடம், எங்கே, எங்கே என்று அவர்கள் தேடுவதிலே ஆச்சரியம் கொள்வதா, ஆயாசப்படுவதா? என்று கேட்கிறேம். மனமாற்றம், ஜாதி இந்துக்களிடையே ஏற்படாவிட்டால், தீண்டாதார் எனப்படுவோர், மதமாற்றத்தை மேற்கொள்வர் என்பதுமட்டுமல்ல, மேற்கொள்ளவேண்டும் என்ற பிரச்சாரம் வலுவடையும் என்பதும் உறுதி. செங்கற்பட்டு ஜில்லா கருங்குழி எனும் கிராமத்தைச் சார்ந்த எல்லப்பன் என்ற ஒரு தோழர் பத்திரிகையிலே, கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறர்.

### கருங்குழியார்.

"மதுராந்தகம் தாலூகா அருங்குணம் கிராமத்தில் தேவாதூர் சேரியிலிருக்கும் ஆதித் திராவிடர்களுக்கு சுமார் 300 ஏக்கர் நிலம் சொந்தமாக இருக்கிறது. அவ்வூர் ஏரி சிறிதாகையால் கடைப்போக்கிலுள்ள மேற்படி சேரிமக்களுக்குச் சொந்தமான நிலங்களுக்குத் தண்ணீர்பாய்வது சிரமம். ஆதலால் அந் நிலங்களில் அநேகமாக விளைவுகாண்பது அரிதே. சாவியாகப் போய்விட்ட போதிலும்கிஸ்திபணம் மட்டில் உழவுமாடுகளை விற்றேனும் கட்டும்படியாகிறது. மேற்படி நிலங்களுக்கு அருகே ஒரு பெரிய ஓடை போகிறது. அதற்கு அணைகட்டுக் கட்டினுல், மேற்படி நிலங்களுக்குத் தண்ணீர் கிடைத்துமுதல் தர விளைநிலங்களாகிவிடும். பலவிதங்களில் முயன்றும் அணைகட்டும் முயற்சிக்கு ஆதரவு கிடைக்காமல் கிராம ஜனங்கள் பெரிதும் கஷ்டப்பட்டு வருகிறர்கள். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பாதிரிமார்கள் சிலர் தாங்கள் அணைகட்டிப் பாசன வசதிசெய்து தருவதாகவும் அதற்குப் பிரதியாக சேரியிலுள்ள குடும்பங்கள் அனைத்தும் ஹிந்து மதத்தை விடுத்து கிறிஸ்தவ மதத்திற்கு மாறிவிடும்படி சொல்லியும் வருவதாகக் கூறப்படுகிறது. போதிய நிலமிருந்தும் விளைவில்லாது பட்டினியால்வாடுவதைக் காட்டிலும் மேற்படிமுயற்சிநல்லதென்று தோன்றி மத மாற்றத்திற்கு சிலர் சம்மதப்படுவதாகத் தோன்றுகிறது. ஆகவே ஹிந்து மதாபிமானிகளும், தரும சீலர்களும் இந்தச் சந்தர்ப்பத்தில் முன் வந்து இம்முயற்சியை மாற்றி மேற்படி குடும்பங்களுக்குச் சௌகர்யம் செய்து ஆதரிக்க முற்படும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்."

மதமாற்றமா, தண்ணீர் வசதிபெற மதமாற்றமா? என்றுகலங்கும் அன்பர்களுக்குக் கூறுகிறேம், தண்ணீர் வசதியும்இன்றி தவிக்கும் தோழர்கள் இருக்கிறர்களே அவர்களின் தத்தளிப்பைக் கண்டும் நமக்கென்ன என்று இருக்கிறீர்களே, இது தர்மமா, நியாயமா, மனிதாபிமானமா? தண்ணீருக்கும் தவிக்கும்படி மக்களைவிட்டுவைப்பதும், பிறகு அந்த வசதிபெற அவர்கள் மதம்மாறுகிறர்களாமே என்று மார்பிலே அடித்துக் கொண்டு அழுவதுஎன்றால், இந்தப் போக்கை என்னென்பது!

கருங்குழித் தோழரின் அறிக்கையைப், பாதிரிமார்மறுக்கக்கூடும், அது வேறு விஷயம், நாம் கவலைகொள்வது அது பற்றியல்ல. தோழரின் வேண்டுகோளின்படி, "இந்துமதத்திலே பற்றுகொண்ட தர்மவான்கள்" தண்ணீர் தருமம்செய்ய முன்வரக்கூடும், அதைப்பற்றியும் நாம் இதனை எழுதினேமில்லை. தண்ணீர் அல்ல, இந்த மதமாற்றத்துக்குக் காரணம். பன்னெடுங்காலமாகப் பழங்குடி மக்களை இந்து மதத்தின் ஜாதி முறை படுத்துகிறகொடுமையினலே வாடிஅவர் கள்வடித்த கண்ணீர். அந்தக்கண்ணீர் தான், காடுமேடுகளிலே "கர்த்தர் கோவில்கள்" கட்டிடஉதவுகிறது. கருங்குழித் தோழரின் "அபாயஅறிவிப்பு" போலப்பன்முறை பலர் விடுத்தனர், ஆனுல் நிரந்தரமான வழிகாணப்படவில்லை. மனம் மாறவில்லை, மதம்மாறுவதும் ஓயவில்லை,

### சாவுதான் விடுதலையாம்!

இந்து மதத்தின் மணிகளின் திருவாய்மொழி இன்னமும், மனமாற்றத்தைக் காட்டக்கூடியதாகவோ, மனமாற்றம் ஏற்படும் என்ற நம்பிக்கையை ஊட்டக்கூடியதாகவோ இல்லை. 1937-ம் ஆண்டு டிசம்பர் 5-ந்தேதி, சென்னை திருவல்லிக்கேணி சிங்காச்சாரி மண்டபத்திலே, திவான்பகதூர் இராமசாமி சாஸ்திரியார் தலைமையிலே அகிலஇந்திய பண்டிதபரீக்ஷத் நடைபெற்றது. அதிலே இந்துமதத்தின் உட்பொருள் மெய்ப்பொருள்உணர்ந்த மேதைகள் கூடினர், ஆதித்திராவிடரைப்பற்றிப் பேசினர். சிலருடைய மொழிகளை இதோ தருகிறேம், இந்து மதத்தின் வழியைக்கருங்குழியார் உணர. பிரம்மஸ்ரீ சாஸ்திர ரத்னதீத்தியூர் சுப்பிரமணிய சாஸ்திரிகள் பேசியதாவது.



"சாஸ்திரம், தீண்டாதாராகப் பிறந்தவரை சண்டாளர்எனக் கூறுகிறது. ஆச்சாரங்கெட்டதாலும், கெட்ட சகவாச தோஷத்தாலும் கூடத் "தீண்டாமை" ஏற்படுகிறது. ஆனல்சாஸ்திரப்படி இவைகளுக்குப் பரிகாரம்உண்டு. இத்தகையவன், (ஆச்சாரங்கெட்ட பார்ப்பனன்) பிரமண அந்தஸ்த்தை இழந்துவிடமாட்டான். ஏனெனில் அவனுக்குப் பிராயச்சித்தம் உண்டு. சண்டாளர்களுக்குத்தீண்டாமைபோக சாஸ்திரப்படி எந்தவிதப் பிராயச்சித்தமும்கிடையாது. இதுவே சாஸ்திரநிலைமை" என்று குறிப்பிட்டார். வேறொருவர் இன்னம் விளக்கமாகக் கூறினர். பிறவியிலே தீண்டாதானுக ஜெனித்தவன் இந்த ஜென்மத்திலே அதைப்போக்கிக்கொள்ளமுடியாது. வீணுகவிவாதம் ஏன்? தீண்டாதாரை நல்லபடி, பக்தியுடன் வாழும்படியான வழிகளைச்செய்யலாம். தீண்டாதாரில் உயர்ந்தோரின் மேன்மையைப்புகழும் ஏடுகளை எடுத்து நவீனக்கொள்கைகளுக்கு ஆதாரம்காட்டுவது பொருந்தாது. ஒருமரம் தோப்பு ஆகுமோ," என்று கேட்டனர். நந்தன், திருப்பாணுழ்வார் என்ற பக்தர்களின்கதையை ஆதாரமாகக்காட்டி, சமஉரிமைகேட்பது சிலருடைய வாடிக்கை. சாஸ்திரிகள் அத்தகையோருக்குத் தருகிறர் இந்தச் சம்மட்டி அடி! இதைவிடத் தெளிவாகவும், இம்மியும் குறையாதஇந்துமார்க்கமதை யுடனும், தொடவாசல் நரசிம்மாச்சாரியார் என்பவர், செத்தால்ஒழியத் தீண்டாமைபோகாது என்று கூறிவிட்டார். "தீண்டாதாருக்குப் பிறந்தவன், செத்தால்தான் தீண்டாமைபோகும், பக்தி மூலமாகத்தான் உயரலாம் ஆனல் இந்த ஜென்மத்திலேயே தீண்டாமையைப் போக்கிக்கொள்ளக்கூடிய அளவுஉயரமுடியாது" என்று அவர் கூறினர்.

### நாம் திராவிடர்.

இங்ஙனம் இவர்கள் பேசிடக்காரணம் என்ன? பழங்குடிமக்களைப் பஞ்சமர் என்று ஒதுக்கி ஒடுக்கி வைப்பதுகூடாது என்ற சாதாரண அறிவுகூடவா அவர்கட்கு இல்லை. உண்டு. பின்னர் ஏன், அவர்கள் அதுபோலப்பேசினர்? இந்து மார்க்கத்தின்படி சமூகம் நடைபெற வேண்டுமானல் நாலுவருணமும், ஐந்தாவதாகப் பஞ்சமனும், இருந்தேதான்தீர வேண்டும். இந்த ஏற்பாடே இந்துமதத்தின் உயிர்நாடி. இந்த ஏற்பாட்டைப் புகுத்தவே இந்து மதம் ஏற்பட்டது. இந்த ஏற்பாட்டை நீக்கிவிட்டால், பிறகு இந்துமதம் இருக்காது. எனவேதான் இந்துமதத்திலே அக்கரைகொண்ட ஆரியப்பண்டிதர்கள், அதுபோலப் பேசினர். இந்துமதம், அங்ஙனம் பேசிய வேதியக்கூட்டத்தைப் பூதேவராக்கிக் குருமார்களாக்கி, மோட்சத்தார்களாக்கிப் பாடுபடாது வாழவழியுண்டாக்கிவைத்திருக்கிறது. எப்படி அவ்வளவு "இலாப கரமான" மதத்தை அவர்கள் விடுவார்கள். ருசிகண்ட பூனைசும்மா இராதாமே! பரம்பரையாகப் பலன்தந்த ஒரு மார்க்கத்தை அவர்கள் கைவிடுவார்களா? அதுபோலவேநாலுவர்ணம்எனும் ஜாதிப்பாகுபாடு, ஆரியர்களை முதலாமிடத்திலே வைத்திருக்கிறது! ஆரியர்கள் அதனை அழிக்க விரும்புவரா? எந்தஇந்து மதமும் அதன் உயிர்நாடியாகிய வர்ணாஸ்ரமும், தம்மைப் பூதேவர்களாக்கி வைத்துச் சுகமாக வாழவழிசெய்து வைத்திருக்கிறதோ அதனைக் காப்பாற்ற அந்த ஆரியர்கள்கடமைப்பட்டவர்கள், அதுவே அவர்களின் ஜீவ இலட்சியம், வாழும் வழி. அதே முறையிலே, நமக்கும் வாழ்க்கை இலட்சியம் இருக்கவேண்டாமா? நம்மை அதே இந்துமதம் சூத்ரனுக்கிப் பஞ்சமனுக்கிக்கொடுமைக்கு ஆளாக்கி, தற்குறியாக்கித் தரித்திரனுக்கித் தாசனுக்கி நீசனுக்கிவிட்டதே, இன்னமும் நாம், ஏன் அந்த இந்துமதத்தைக்கட்டி அழவேண்டும்? கட்டி அழும்வரை நமக்கு மீளமார்க்கம் எங்கிருந்து கிடைக்கமுடியும்? உவர்ப்பு நீருடன் எவ்வளவு இளநீர் கலந்து பருகுவது, எத்தனைகாலத்துக்கு முடியும்? என்பனவற்றை இந்துமதத்தை சீர்திருத்தி இதம் உண்டாக்கக் கருதும் தோழர்கள் எண்ணிப்பார்க்கவேண்டும். 100-க்கு 3-பேராக உள்ள ஒரு கூட்டத்துக்கு மட்டுமே உயர்வும் நலனும், வாழ்வும் வளமும், பெருமையும் தருவதாக இருக்கும் ஒரு மதத்தைக் கட்டி அழுது கொண்டு 97-மக்கள் "சூத்திராகவும் சண்டாளராகவும்" வாழுவதும், இடையிடையே இருக்க இடத்துக்கும் குடிக்கத் தண்ணீருக்கும் 'இருப்பவரிடம்' இளித்த வாயுடன் நின்று கெஞ்சுவதும், ஏன்? நூற்றுக்குத் தொண்ணூற்றேழு பேருக்குப் பலன்தராத ஒரு மார்க்கத்தைத்தமக்குரியது என்று கூறிக்கொள்வது எந்த நியதிக்குப்பொருந்தும்? பிறன் இல்லத்திலே பிடித்தவனிடம் தன் இடை அழகையும் நடை ஒய்யாரத்தையும் காட்டிக் காமக்கணைபூட்டி வாழுபவளை "என் மனைவி" என்று எந்த ஏமாளிகூறுவான்? அது போலப்பார்ப்பனருக்கே பலவிதத்திலும் பலன் அளிக்கும் ஒரு மதத்தை, "நமது மதம்" என்று எப்படிப் பார்ப்பனர் அல்லாதார் கூறமுடியும், ஏன்கூற வேண்டும்? என்பன போன்றவைகளை, "இந்துமத சீர்திருத்தம்" என்ற இனிப்புக் காடியைப்பருகும் அன்பர்கள் எண்ணிப்பார்க்க வேண்டுகிறேம். இவைகளை அவர்கள் எண்ணிப்பார்ப்பார்களானல், சிலர் மதம் மாறுவதைக்கண்டு மனம் மருளமாட்டார்கள் என்பது மட்டுமல்ல, "இந்துமதம் எமது மதமல்ல" என்று திட்டமாகக்கூறுவர். உண்மையும் அதுவே. நாம் இந்துக்கள் அல்ல, திராவிடர்.

### மவுன்ட்பேட்டன் பிரபு.

கோஹிமா முற்றுகையைத் தகர்த்தெறிந்து, மணிப்பூர் முற்றுகையை முறியடித்து, அப்பகுதியிலிருந்தஜப்பானியப் படைகளுக்கு ஏராளமான நஷ்டத்தை ஏற்படுத்தி விரட்டி அடிக்கத் திட்டமிட்டுவெற்றிபெற்ற வீரத்தலைவர்மவுன்ட்பேடன் பிரபு. வெற்றிபெற்ற நேசப் படைகளுக்கு வாழ்த்துச்செய்தி அனுப்பி இருக்கிறர். குறிப்பாக மோகாங் என்ற இடம் நேசநாட்டினரிடம் பிடிபட்டது, மகத்தானவெற்றி. எதிரிக்குப் பெரியதோர் நஷ்டம். இம்பால் முனையிலேயும் எதிரிபின்வாங்கிஓடிவிட்டான். இங்கிலேயிலே, பசிபிக் முனையிலே, தலைகாட்டத் துணிந்த ஜப்பானிய கடற்படையை அமெரிக்க கடற்படை தாக்கிப் பெருஞ்சேதத்தை விளைவித்திருக்கிறது.

விஷ்ணுபூர் பகுதியிலே எதிரியின்விஷமம் ஓயவில்லை. இம்பாலை, விஷ்ணுபூர் பக்கமிருந்து தாக்க எதிரிகள் முயலுகின்றனர். இந்த முயற்சியையும்முறியடித்து, எதிரியின் படைவரிசையிலே பின்புறம் இறங்கித்தாக்கும், சிண்டிட் படையும், ஜெனரல் ஸ்டில்வெல் நடாத்திச்செல்லும் அமெரிக்கப்படையும், வடபர்மாவிலே விடாது முன்னேறுகின்றனர். இந்தச் சிண்டிட் படையிலே சேர்ந்து போரிட்டு ஒரு காத்தை இழந்துவிட்டார், வைசிராய் வேவலின் திருமகனுர்.

மவுண்ட்பேடன் பிரபுதான்இதுபோது நேசநாட்டினர் நார்மண்டியிலே நடத்தும் போர்த்திட்டத்தைத் தயாரித்தவர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

# அந்தோ! மறைந்தார்!

இடிமுழக்கமெனப் பேசும் நாவலர், பாகிஸ்தான் பரணிபாடிய பாவலர், காயிதே அஃலமின் கூட்டுறவைக் கனிவுடன் பெற்ற லீகினர், நவாப்யர் ஜங்பகதூர் அவர்கள், திடீலென்று நெஞ்சுதிடுக்கிடும் விதத்திலே 25—6—44ல் ஐதராபாத்தில் இறந்தார் என்ற செய்தி கேட்டோம், என்னே இது என்று ஏக்கமுற்றோம், அந்தோ! மறைந்தாரா, அஞ்சாநெஞ்சினர் என்று அலறினோம். நவாப்யர் ஜங்பகதூரின் மரணம், சர். சிக்கந்தரின் மறைவுபோலவும், சர்: செல்வத்தின் மறைவுபோலவும், மிகமிக நெஞ்சுருக்கும் விதமானது. பலமாதம் படுக்கையிலிருந்து மெலிந்து, பக்கத்துள்ளோர் சலித்துத் தூரத்துள்ளோர், நம்பிக்கையைக் கைவிட்டு, மருத்துவர் இனி என்னால் ஆவது ஒன்றுமில்லை என்று கூறிவிட்ட பிறகு, உயிர் உடலிலே ஊசலாடிக்கொண்டு, ஈளைகட்டி இருமி, கண்ணீர் வடிந்து கைகால் சில்லிட்டு, மிரட்சி அடைந்துக் குளறல்கண்டு குறட்டை விடுவதுபோலக்கூவிப் பிறகுக் கூட்டைவிட்டு ஆவிபோவதானாலும், ஆண்டாண்டு தோறும் அழுதுபுரண்டாலும் மாண்டார் வருவரோ இம் மாநிலத்தில் என்ற முதுமொழி தெரிந்திருந்தும், வீட்டாரும், நாட்டாரும் விம்முவர். செல்வமும் சிகந்தரும், யர்ஜங்கும், படுத்துப் புரண்டனரில்லை, படுக்கையில் சுருண்டிடவில்லை, திடீலென, எதிர்பாராதவிதமாக, மறைந்தனர், எங்ஙனம் துக்கம்ஆறும். ஜஸ்டிஸ் ஹாஷிம் அலிகான் மாளிகையில் ஒரு மோட்டாரில் உட்கார்ந்துகொண்டு புகை குடித்துக்கொண்டிருந்தாராம் யர் ஜங், உயிர் போய்விட்டதாம்! எவ்வளவுநெஞ்சு சோகிறது இத்தகைய மறைவினைக் கேள்விப்படும் போது. ஹைதராபாத் நிஜாம் முதற்கொண்டு, சாதாரண லீக் தொண்டர்வரையிலே, முஸ்லீம்கள் மட்டுமின்றிச் சகலவகுப்பினரும், சுமார் இலட்சம் பேருக்குச்சென்று துக்கம் விசாரித்தனராம், நவாப் யர்ஜங் பகதூரின் இல்லம் சென்று. பண்புள்ள தோழனை இழந்தேன் என்று பரதவித்து, ஒரு அனுதாபச் செய்தி அனுப்பியுள்ளார், ஜனுப் ஜின்னு.

பிரபலகுடும்பத்தினர் யர்ஜங், மொகல் பரம்பரை. உருது, பாரசீகம், அரபி மொழிகளிலே வல்லுநர். இந்தியாவிலேயே அவர்போல் உருதுவில் பேசுபவர் இல்லை என்ற கீர்த்தி வாய்ந்தவர். சுதேசசமஸ்தானங்களிலே உள்ள இஸ்லாமியரின் நலன்களைக் கவனிக்க சமஸ்தான முஸ்லீம்லீக் நிருவிப்பணிபுரிந்து வந்தவர். முஸ்லீம்கள், தங்கள் பாதுகாவலரில் மிகமுக்கியமானவர் ஒருவரை இழந்துவிட்டனர். இந்திய உபகண்டம் இணையில்லாப் பேச்சாளியை இழந்தது. திராவிடம் ஓர் கூட்டாளியை இழந்துவிட்டது. என்செய்வது, இடுக்கண் இது போல நேரிடுங்காலையில் இறந்தவர்போக இருப்பவர், இறந்தவரின் இலட்சியங்களுக்குழைத்து, நன்றிகாட்டுவதே முறை என்ற ஆன்றோர்மொழி அறிந்து நடப்பதன்றி வேறென்ன செய்ய முடியும்!

வைசிராய் வேவல்.

ஆகஸ்ட் தீர்மானத்தை வாபீல் வாங்கினுல் மட்டுமே, மேற்கொண்டு அரசியல் சிக்கல்போக வழிபிறக்கும் என்று கூறினர் வைசிராய்.

ஆகஸ்ட் தீர்மானத்தை வாபீஸ் வாங்கமுடியாது என்று மறுத்துவிட்டார் காந்தியார்.

ஆகஸ்ட் தீர்மானமே நாட்டின் அமளிகளுக்குக் காரணம் என்றும், யுத்த ஆதரவைக்குலைக்கும் முயற்சி என்றும் சர்க்கார் தரப்பிலே கூறப்படுகிறது. காந்தீயத்தினர் இதனை மறுக்கின்றனர்.

இந்நிலையிலே, காரியக்கமிட்டியினரைக் காணவேண்டுமென்றும், அஃது இல்லையேல், வைசிராயைக் காண அனுமதிவேண்டுமென்றும் கோரிக் காந்தியார் வைசிராய்க்குக் கடிதம் எழுதினர்.

வைசிராய், இக்கோரிக்கைகளுக்கு இணங்க மறுத்துவிட்டாராம். காந்தியாரிடம் மனமாற்றம் ஏற்படாதபோது, மேற்கொண்டு அவரைக் காண்பதிலோ, அவரும் காரியக்கமிட்டியினரும் சந்திக்க அனுமதி தருவதிலோ, என்னபயன் இருக்க முடியும் என்று கருதியே, வைசிராய், காந்தியாரின் கடிதத்திற்கு மறுப்பு அளித்திருக்கவேண்டும்.

காந்தியார், இதுகண்டு சோகம்கொண்டு, மீண்டும் தன்னைச் சிறைக்கு அழைத்துச்செல்லும்படி சர்க்காருக்குக் கடிதம்எழுத உத்தேசிப்பதாகவும், ஆச்சாரியார், இதுகூடாதென்று காந்தியாருக்கு இதமாகக் கூறுவதாகவும் ஒருநிருபர் தெரிவிக்கிறார். போகப் போகத்தெரியும்!

## திருமண அழைப்பு.

பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்கள் தலைமையில் திண்டுக்கல் தாலூக்காகல்வார்பட்டியில் திருமணம்நடைபெறும். மணமக்கள் திண்டுக்கல், மு. இரா. மத்திரன் அவர்கள் திருமகள் இராசமணி கல்வார்பட்டி திரு. ல. வீ. சுப்பையன் செட்டியார் தம்பி தோழர் ல. வீ. இலட்சமணன் அவர்கள் திருமகன் திருமலைசாமி. நவக்காணி, திரு. கோ. வெங்கட்டராமஞ் செட்டியார் அவர்கள் திருமகள் சுப்பம்மாள். கல்வார்பட்டி திரு. மொ. ல. வெ. கோவிந்தசாமி செட்டியார் அவர்கள் திருமகன் வெங்கடாசலம். அ. பொன்னம்பலனர், நடிகமணி டி. வி. நாராயணசாமி முதலிய தோழர்கள் சொற்பொழிவாற்றுவார்கள். அனைவரும் வருக. இங்ஙனம்

மு. இரா. மத்திரன்.

## காஞ்சியில் "கிந்தனர்"

காஞ்சிபுரம், ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளிக்கு விளையாட்டு மைதானம் வாங்கும் நிதிக்காக, 25—6—44ல், காஞ்சி கண்ணன் டாகீசில், நகைச்சுவை அரசர் தோழர் N. S. கிருஷ்ணன் அவர்கள் "கிந்தனர்" காலட்சேபம் நடத்தினர். செங்கற்பட்டு மாவட்ட ஆட்சிமன்றத் தலைவர் தோழர் T. சண்முகம் அவர்களைத் தலைமைவகிக்கும்படி தோழர் தணபதிராவ் பிள்ளை கேட்டுக்கொண்டார். தலைவர், தோழர் கிருஷ்ணன் அவர்களை வரவேற்றார். இரவு 9-30யிலிருந்து 12-30 மணிவரை, "கிந்தனர்" காலட்சேபத்தை மிகஇனிய முறையிலே தோழர் N. S. கிருஷ்ணன் நடத்தினர். காலட்சேபம் முடிந்ததும், காஞ்சி திராவிட நடிகர் கழகத்தின் சார்பில் தோழர் C. N. அண்ணாத்துரை ஒரு வாழ்த்துப் பத்திரத்தைத் தோழர் N. S. கிருஷ்ணன் அவர்களுக்கு வாசித்தளித்தார். காஞ்சீ தங்கவேலர் ... சார்பிலே, தோழர் சிவபூஷணம் அவர்களும், தன்மான இளைஞர்கழகச் சார்பில் தோழர் C. V. M. அண்ணாமலை அவர்களும், வாழ்த்துப்பத்திரங்கள் அளித்தனர். தோழர் N. S. கிருஷ்ணன், வாழ்த்துரைகளுக்கு நன்றிகூறினர். ஆண்டர்சன் பள்ளித்தலைமை ஆசிரியர் நன்றி கூறியபிறகு நிகழ்ச்சி முடிவுற்றது.

## விவசாயத்தைப் பெருக்க 1000 கோடி ரூபாய்.

இந்திய விவசாயத்தையும் கால்நடை வளர்ப்பையும் பெருக்க ஆராய்ச்சிசெய்த விசேஷக் கமிட்டி ஒரு திட்டம் வகுத்துள்ளது. முதலில் 1000 கோடி ரூபாய்முதலும் பின்னர் வருஷாவருஷம் 20கோடி ரூபாயும்செலவாகும். யுத்தத்திற்கு முன்னிருந்த மதிப்பைக் கொண்டு இத்திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மதிப்பு 2000கோடி வரை உயரமுடியும். ஆரோக்கிய உணவு அனைவருக்குங்கிடைக்கும்படி செய்வதே இத்திட்டத்தின் நோக்கம் என்று கமிட்டியின் தலைவர் சர். பிரோஸ்கான் விளக்கினர்.



## ஊரார்-உரையாடல்.

2ம் பக்கத் தொடர்ச்சி.

சேர்ந்திருக்கார். சூட்சமத்தைத் தெரிந்துகொள்ளாமே பேசிண்டே போறீளே.

கோபா:-அது என்ன இருக்கு சூட்சமம்.?

கோம:-தான் சேர்ந்தாலும் சேராவிட்டாலும், செட்டிநாட்டுப் பக்கத்திலே, கஸ்தூரிநிதிக்குப்பணம்சேர்ந்துவிடும்னு அவருக்குத் தெரியுமேன்னே! சரி, நாம் இல்லாமே, இந்த வசூல்வேலை நடந்தா, மற்றக் காங்கிரஸ்காரா, செட்டிமாரிடம் போய், இந்தக் கமிட்டியிலே குமாரராஜாபோன்றவா இல்லை, எல்லாம், தங்களைப்போன்றவாதான், தானும், அவர், எங்களைப்போன்றவாளைச்சேர்க்காமேபோனு, பணம் எங்கிருந்து கிடைக்கும்னு கேலிபேசறதா கேள்வி. அவா நாளைக்குக் கேட்டா வெட்கப்படும்படியான அளவு தொகையைச் செட்டிநாட்டிலே திரட்டிக்காட்டினுதான், அவாளுடைய கேலி ஒழியும், நாமெல்லாம் அவா எதிரிலே தலைநிமிர்ந்து நடக்கமுடியும், என்றெல்லாம்சொல்லி, அமோகமா பணம் திரட்டிவிடமுடியும். இது குமாரராஜாவுக்குத்தெரியும். நாம் இல்லாவிட்டா, அதிகமாகப் பணத்தை வசூல் செய்துவிடுவா, நாமேகமிட்டியிலே தலைவராக இருந்தா, பூரா ஏற்பாடும் நம்மிடமே இருக்கும், அப்பொ, எதோ கொஞ்சமா, ஒப்புக்கு வசூல்செய்துகொடுத்துவிடலாம், இல்லையானு அன்யாயமா, இலட்ச இலட்சமாப்பணம் செட்டிநாட்டைவிட்டுப்போய் விடும்னு நினைச்சுத்தான் கஸ்தூரிபாய் கமிட்டியிலே தலைவராக இருக்கச் சம்மதித்தார். இனி அவர் பார்த்து, மனசுவைச்சி வசூல் செய்வதைத்தானே மகாத்மா பெறமுடியும்.

கோபா:-அட, அட, அடா! கோமளம், நீ மகாபுத்திசாலி! கிருஷ்ணய்யரவாள்! இதுதான் சூட்சமம், இதற்காகவேதான், குமாரராஜா இதிலே சேர்ந்திருக்கவேண்டும். நேக்கு இப்போ நன்னு புரிஞ்சுபோச்சு. நிச்சயமா, அதிகப்பணம் வசூலாகாமே பார்த்துக்கொள்ளவேணும் என்ற திட்டம் கொண்டுதான் இதிலே சேர்ந்திருப்பார், சந்தேகமே இல்லை. கோமளம், நோக்கு யார் சொன்னது இந்த விஷயத்தை?

கோம:-ஒருவர் சொல்லணுமா? வெள்ளையாத் தெரியறதே! திலகர்நிதி, படேல் நிதி, அரிஜன பண்டு, கதர்பண்டு முதலான எதற்கும் சேராதவர் இப்ப சேர்ந்தா, அதிலே சூட்சமம் இராமற்போகுமோ? டாக்டர் சுப்பராயன் மாதிரி, காங்கிரசுக்கு வந்துட்டிருந்தா, அப்ப இப்படி நினைக்க இடமில்லை. இப்ப, நான் சொன்னதைத் தவிர வேறே என்ன காரணம் இருக்கமுடியும் ஜஸ்டிஸ் கட்சியிலே இருந்துண்டே கஸ்தூரி பண்டிலே சேர.

கிருஷ்:-பேஷ்! கோமளம்! உன்னைச்சுத்த அசடுன்னு நினைச்சது தவறுன்னு இப்பத் தெரியறது.

கோபா:-கீர்த்தி, எலக்ஷனிலே சௌகரியம், காங்கிரஸ்கூட என் உதவியைக்கோரித்தான் வாழமுடியும்னு சொல்லிக்கொள்ள ஒரு சந்தர்ப்பம், பண்டு செலவிடும்போது அதிலே செல்வாக்கு, சர்க்காருக்குக் காங்கிரசைக் குறைத்துப்பேச ஒரு சந்தர்ப்பத்தை உண்டாக்கிக் கொடுப்பது, இவ்வளவோடு, செட்டிமாரிடமிருந்து அதிகப்பணத்தை வசூலிக்காதபடி பந்தோபஸ்துத் தேடிக்கொள்வது ஆக ஆறுஅம்சமன்னே அடங்கி இருக்கு அந்த ஆசாமி கஸ்தூரிபாய் கமிட்டியிலே சேர்ந்ததிலே.

கிருஷ்:-ஆரேடே போவானேன், காங்கிரசுகூட என்தயவைத் தேடறது பாருங்கோ, எனக்கு அவ்வளவு செல்வாக்கு இருக்கு, அதைத் தெரிஞ்சுண்டு நடக்கணும்னு சர்க்காருக்குக்கூடச் சொல்வார், அது ஒண்ணு இருக்கு!

கோம:-எட்டாவது அம்சமிருக்கு தெரியுமோ?

கிருஷ்:-அது என்ன?

கோம:-இப்ப கொஞ்சநாளா, தமிழிசை இயக்கம்னு ராஜா சொல்றதிலே, நம்மளவா எதிர்த்துண்டு வர்ராளேன்னே, இப்ப, குமாரராஜா, கஸ்தூரிபாய் கமிட்டியிலே சேர்ந்தாலே, அந்த எதிர்ப்புக்கூடக் கொஞ்சம்குறையும். அதுவும் இலாபமில்லையோ.

கிருஷ்:-அப்படின்னு காங்கிரஸ் கட்சிக்காராசெய்திருக்கிற காரியம்புத்திசாலித்தனமேஇல்லைன்னு தெரியறது.

கோம:-அப்படிச் சொல்லிடப்படாது. இவ்வளவு காரணங்களையும், குமாரராஜா போன்றவா, யோசிக்கும்படியாசெய்துதானே, அவாளைக் கமிட்டியிலே ஆசைகாட்டிச்சேர்த்திருப்பா!

கிருஷ்:-ஆமாம்! கியாதிவரும், எலக்ஷன் சமயத்திலே இது உதவிசெய்யும்னு சொல்லித்தான் இருப்பா.

கோம:-சிலபேர் அதைச்சொல்லி இருப்பா. வேறு சிலபேர், காங்கிரஸ்காரரை மட்டுமே, இந்தப்பண வசூல் வேலையிலே இருக்கவிடக் கூடாது, அவாளுக்குத்தான்நாட்டிலேசெல்வாக்குஇருக்குஎன்கிறஎண்ணத்தை வளரவிடக்கூடாது, ஆகையினுலே, தாங்கள் இந்தக் கமிட்டியிலே சேர்ந்துகொள்ளுங்கள், அப்போ நம்மாலேதான் பணம் வசூலாச்சின்னு சொல்லலாம், நாளைக்கு பணத்தைச் செலவிடுகிறபோது நமக்கும் யோசனை சொல்ற அதிகாரம் பிறக்கும், மத்தவா சேர்ந்து அதிகப்பணத்தைச் செட்டிநாட்டிலிருந்து அடிச்சிண்டு போகாமேயும் பார்த்துக்கொள்ளலாம், சர்க்காருக்கும் ஒருவிதத்திலே கிலி இருக்கும், என்ற இந்தக் காரணங்களைக் குமாரராஜாவுக்கு வேறுசிலபேர்சொல்லியிருப்பா. குமாரராஜா யோசிச்சி, இலாப நஷ்டக் கணக்குப் போட்டுப் பார்த்து, இலாபமிருப்பது தெரிந்து கஸ்தூரிபாய் கமிட்டியிலேசேர்ந்தார். காங்கிரஸ் தலைவர்கள் சாமான்யமானவாளா! எந்தக்காரணத்தை நினைச்சுச்சேர்ந்தா நமக்கென்ன! கருவேப்பிலைமாதிரி காரியத்துக்கு உபயோகப்படுத்திக்கொள்வோம், பிறகுத் தூக்கிஎறிந்து விட்டால் போகிறது என்ற நினைப்பிலேதான், குமாரராஜாவைக் கமிட்டியிலே சேர்த்திருப்பா.

கோபா:-ஆமாம்! கோமளம் சொல்றது சரியான வார்த்தைதான்! சிறு துரும்பும் பல்குத்த உதவுமேன்னே! சாப்பாட்டுக்கு உபயோகமாகும் வரை, வாழைஇலை, சாப்பாடுமுடிந்ததும் அதுவே, எச்சிலைதானே!

(மூவரும் சிரிக்கின்றனர். முகத்தை மற்றொரு முறை கண்ணாடியிலே பார்த்துவிட்டுக், கோமளம், இருவரிடமும்விடைபெற்றுக்கொண்டு, வீதியிலே தயாராகக் காத்துக்கொண்டிருந்த ரிக்ஷாவிலே ஏறி உட்கார, ரிக்ஷாக்காரன் இழுத்துக்கொண்டு போகிறுன்!)

(உரையாடல் வெறும் கற்பனை)

## வீராசாமி தோற்றம்.

நமது இயக்கத்தோழரும், நமது சந்திரோதய நாடகத்தில் வேலைக்கார வீராசாமியாக நடிப்பவருமான போளூர். K. சுப்ரமணியம் அவர்களுக்கு ஓர் ஆண் மகவு பிறந்துள்ளது. குழந்தைக்கு வீராசாமி என்று பெயரிடப்பட்டிருக்கிறது.

# அமுத மொழி!

[P. S. சிவம்]

["கதையொன்று சொல்லுவேன்கேள்" என்ற மதனகாமராஜன் சினிமா மெட்டு]

அழதென்று சோல்வாடி—கிளியே
ஆவியெனுந் தமிழ் மொழியை யாரும் (அழ)

இமீழ் கடல் வரைப்பினில் முதன் முதல் தோன்றியே
இன்றளவு மழியாமல் கன்னிமொழியான அதை (அழ)

தீங்கனிச் சாறென மொழிவார்!—சுவையாரும்
தித்திக்கும்நற் கற்கண்டெனத் தேனெனப் புகல்வார் அந்தச்

செந்தமிழன் றேநமது செல்வம் அறிவாய்நீ
சீரார் மடமானே—அதைப்பெறுவோம் (செந்தமி)

ஆர்ந்தநன் மதியுண்டாக்கும்!—வாழ்வில்
ஆனந்தம் மிகவுண்டாக்கும்!—அடிமைதீர்க்கும் (செந்தமி)

## நெருக்கடி.

இன்று பல மாகாணங்களிலே, மந்திரி சபைகளில் நெருக்கடிஏற்பட்டிருக்கிறது. வங்காளத்திலே சர். நாஜிமுதினுடன் ஒத்துழைத்துவந்தவர்களிலே 11மெம்பர்கள் விலகி எதிர்க்கட்சியிலே சேர்ந்து கொண்டனர். மந்திரிகள் மீதுநம்பிக்கையில்லாத் தீர்மானமும் கொண்டுவரப்பட்டது.

ஒரிசாவிலே, முதலமைச்சர் பர்லா கிமிடி ராஜா ராஜிநாமாச்செய்துவிட்டார், மந்திரி சபையிலே அபிப்பிராய பேதமாம்!

பாஞ்சாலத்திலே, லீகின் கட்டுப்பாட்டுக்கு அடங்கமறுத்துவிட்ட முதலமைச்சர் ஒரு முகாமும், லீகினிடம் நம்பிக்கை கொண்டோர் வேறோர்முகாமும்அமைத்துக்கொண்டுள்ளனர். எந்தநேரத்திலே அமளி தொடங்குமோ என்று சிந்திக்க வேண்டிய நிலைமை அங்கு.

சிந்து மாகாணத்திலே, லீக் மந்திரி சபையிலேசேர்ந்துள்ள "இந்து" மந்திரிகள்மீது இந்துமகாசபை நடவடிக்கை எடுக்கவிரும்பவே, இந்துமகாசபையிலிருந்து அந்த மந்திரிகள் விலகிக்கொண்டனர். இதன்விளைவு என்னவென்றுதெரியவில்லை. ஆக, வங்கம், சிந்து, பாஞ்சாலம், ஒரிசா எனும் 4 மாகாணங்களிலும் இன்று குமுறல்கேட்கிறது. ஆங்காங்கு இனஅரசு ஏற்படாதிருக்கும்வரை இத்தகைய நெருக்கடிகளும், குழப்பங்களும் இருந்தேதீரும். இனஅரசு ஏற்பட்டால் மட்டுமே, மக்களின் உண்மைப் பிரதிநிதிகள் ஆட்சியிலே அமரமுடியும். அதுவரையிலே, வளைத்துக்கட்டவோ, அணைத்து வைக்கவோ, மிரட்டிஅடக்கவோ, மயக்கி இழுக்கவோதெரிந்தவர்களாலேமட்டுமே, ஓரளவு நிரந்தரமான மந்திரிசபைகளை அமைக்கமுடியும். அடிக்கடி, அரசியல் நெருக்கடிகள் ஏற்படுவது, வீணருக்கு வேலைதருவதாகும், தரகர்களுக்குத் தட்சணை தருவதாகும்! பொதுமக்களின்நலன் பாதிக்கப்படும். அரசியல் சூதாட்டத்திலே பாய்ச்சிகைகளாக்கப்படும் மக்கள் அவதிக்குள்ளாவர். எனவே, மக்கள் ஈடேற, இனஅரசு ஏற்பட்டாகவேண்டும் என்று அறிந்தோர் கூறுகின்றனர், மக்களின் நலனைமறந்தோர் இந்த உரிமையை மறுக்கின்றனர். அடிக்கடி நிகழும் இந்த அரசியல் நெருக்கடிகள், அவர்தம் சிந்தனைக்கு, உண்மையைத்தருமா!

## கணக்கு விபரம் தெரியவேண்டும்.

திருவண்ணாமலையாரின் கும்பாபிஷேகத்துக்காக நகரத்தார்களிடம் ஏராளமான பணம் வசூல்செய்திருப்பதாகத் தெரிகிறது. அதற்குஊர்பெயர் விலாசம் தொகைமுதலிய விபரங்களுடனும் செலவு விவரங்களுக்கு அயிட்டம்வாரியாக விவரமாகவும் மீதி இருக்கும் தொகைக்கு என்ன செய்வதாக உத்தேசம் என்பதற்கும் பத்திரிகைவாயிலாவது அல்லது கும்பாபிஷேகத்துக்குப் போட்டபுஸ்தக ரூபமாகவாவதுவெளியிட வேண்டியது பணம்வசூல் செய்தவர்களுடைய கடமையாகும் என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன.

காரைக்குடியிலிருந்து வெளிவரும், "குமரன்" வாரஇதழிலே (22-6-44) ஒரு அன்பர் மேலேகண்டுள்ளபடி. எழுதிஇருக்கிறர்,

புரட்சிக்கவி

**கனகசுப்புரத்தினம்**

[பாரதிதாசன்] அவர்கள் தலைமையில்

**திருச்சியில் சுயமரியாதை மாநாடு.**

16—7—44ல் நடைபெறும்.

## இளம் எழுத்தாளர்களுக்கு.

இன எழுச்சியின் தன்மையை நாடு அறியச்செய்ய, இளம் எழுத்தாளர்களின் கட்டுரைகளை வெளியிட்டு வருகிறோம். பத்திரிகையிலே இடநெருக்கடி. எனவே இளம் எழுத்தாளர்கள் ஒரு பக்கத்துக்கு மேற்படாதபடித் தங்கள் கட்டுரைகளைத் தீட்டவேண்டுகிறோம்.



Edited Printed and Published by C. N. Annadurai M. A., at "Dravida Nadu" Press, 51-Chairman, Sambasiva Chettiar Street, L. Conjeeveram.

